# சாற்றுக்கவிகள்.

இஃது

அரிமழம் ப்ரும்ம ஸ்ரீ

சிவானந்த சுவாமிகளருளிச் செய்தது.

உத்தசா மிக்கவமு தன்றிறவோர் சிவத்துறவேவியுமை தான்மணமேல்
வந்தசா மிக்கதிபன வழிவந்தோர் வாழ்ந்தவிராமபு ராணத்த
சந்தசா மிக்கவிமெனத் தமிழாக்கிச் சிறார்கிடைக்கத் தந்தா ராடல்
கந்தசா மிக்கவிஞன் கலைகட்கோர் தலையெனனக் கவின்மேமேலோமென.

---

இவை

அரிமழம் ப்ருமமஸ்ரீ சிவானந்தசுவாமியவர்களின் மாணாக்கரும

ஷெயூர் ஸ்ரீமத் கா. ந. நடேசமசாஸ்திரியாரவர்கள் புத்திரருமாகிய

**மகா-௱-௱-ஸ்ரீ காமாக்ஷி சாஸ்திரியாரவர்களியற்றியன.**

சீர்வளரும் மறைபுகன்ற திருவாசகர் விடம்பெற்ற சித்திவாய்ந்த
பேர்வளரு மாணிக்க வாசகப்பெருமானைப் பேசியாங்கு
நார்வளரும் தென்பாண்டி நாடுசிவ லோகமென்ன ஞாலமோரு
மோர்வளரு நன்னாட்டுக் கோட்டையது விலகுசிவ புரமென்பாரால்.

சிவபிரான் றனக்கிணையந்த திருப்பணிகள் செய்திவைக்குந் திறத்தினையுந்
தவமிக்க வைதோர் சந்ததியா மதனையுஞ் சாற்றுகாலு
மூவமையிலா வெண்ணீறு கண்மணியைந் தெழுத்தணியுமொருவினையு
மவமறுக்கச் சிவகணங்க ளவனியிடை வந்துமெய் யாண்டனரே ()

இத்தகைய சிவநேசர் குழூஉச்செறிந்த தன்மையினால் விடம்பே[illegible]
மெய்த்தவமார் நாட்டுக்கோட்டையெனுஞ்சிவபுரத்தில் விமலர்க்[illegible]
வுத்தமமாம் வடகீழ்பாற் சுவேதநதி வளத்தினொரு நகருண்டோங்கு
[illegible]திருத் தளியனைய தத்தனைம் அரிமழமென் றறைவர்மேலோர்
[illegible]புரிவாழ் செல்வர்கடம் மகவெல்லாம் பாதவன்றோ ரணுகவன்பார்
[illegible]சயபுரிமையோடவனைச் சிறந்தேர்நண் குருநட்டவா வென்னத்தேரோ
டபுரிவு கண்டவனு முடனுடை வதனாலே யப்பேரானன்றோ புராற்றோ
மெய்ப்புகழ்சேர் நகரதற்கு விருப்பினிட்டா ரெனினதன்சீர் விளம்பு

சுந்தரமார் ளப்பெருமான் கைலைபினு மிகவிரும்பிக் கவிஞரங்ஙன்
சுந்தரநா மநதரித்துக் கயற்கண்ணித் துணைவியுடன் றுலங்குநின்று
னநதரர்மன மொழுதிறைஞ்சவத்தலமான் மியம்புலவர்க்கமுதாயாத்தா
னந்தரமோ வவன்புலமை கந்தசா மிப்பெயர்கொண் ணுவலோனே.()

---

இவை சோழவந்தான் வித்துவான் ஸ்ரீமத்

## அ. சண்முகம்பிள்ளை யவர்களியற்றியன.

---

பூமாதுந் தவமாதும் புகழ்மாதும் போர்மாதும்
நாமாது மிகசசிறந்தே நாமாது மிந்நாட்டுக்
கோமாது கோல்கொளலா லெனத்தருக்கிக் குடிகொள்ளுந்
தேமாதுங் கப்பனசந் திகழ்பாண்டித் திருநாட்டில். (க)

அரிமழுமா நகரத்தா ரருள்கொண்ட லருள்கொண்ட
பரிமளமா னகரத்தார் பரிமழுவாம் பன்முழவார்
விரிமளமார் முன்றிலினர் மேருவெனப் பொற்குப்பை
புரிவணிகர் பலருமுளமு பூரிதநூக் களிபூப்ப. (உ)

அன்னருண் மிகவொளிர்முத் தடைகசப்ப னெனும்வள்ளன்
முன்னாட்செய் தவவலியின் முதிர்ச்சியினாற் கற்பகமே
யிந்நாளின் மக்களுரு வெடுத்தனைய கொடைத்தனையன்
சென்னாவார் செல்லப்பச் செமமலிது செப்புகென. (ங)

முன்னாட்டு மரிமழத்தின் முறைநாட்டு முக்கணுடை
மின்னாட்டு சடிலமுடி விமலமுழு முதற்கரும்பின்
னுட்டின் விளைசரிதத் தனியிரதந் தனைத்தமிழிற்
பொன்னாட்டிற் புலவர்களும் புகழ்ந்தேறப் புகன்றனனால். (ச)

மகவூரு மெறும்பினுக்கு மணிவாரி வழங்குவள
முகவூரிற் பரம்பரையா முதுபுலமை மதுவுண்டு
தகவூரும் பரம்பரைகோன் றுன்பணிந்து களியாடி
மிகவூரு மாண்பினராம் வேளாளர் வியனகுலத்தோன். (ரு)

இசைபெற்ற வலம்புரிநேர் வலம்புரியுங் குடிபெற்ற
இசைபெற்ற முத்தனையா னிராமசா மிக்கவிஞ

னசைபெற்ற சுதருளுபர் நலம்பெற்ற நாவலோன்
தசைபெற்ற வுடலுயிர்போ லெனைநட்ட தன்மையான். (௬)

மேருகந்த மாதனமே மாதனமா யினிருமையான
சீருகந்த மாதனக தேவிபிறை தேவடியம
போருகந்த மாதனமென றகமலமேற பூத்தருள
தாருகந்த சாமிபுகழ்ந்த தாருகந்த சாமியே. (௭)

நங்கந்த சாமிபுக னற்சரித மரிமழவூர்
தங்கந்த மாநியிலான் சந்திதியி லரங்கேற்ற
வங்கந்த மாலைபுனை தனபிறைடு சிறப்பியற்றி
யிங்கந்த னலவணிக ரெலலாரு முவந்தனரே. (௮)

---

இவை
முறையூர் ஸ்ரீமாந பழ. சி. ஷண்முகஞ்செட்டியாரவர்கள்
சமுக.வித்துவான கொட்டாம்பட்டி மகா-ள-ள-ஸ்ரீ
**கருப்பையாப்பாவலரவர்களியற்றியன.**

---

பொன்னில மதுத ராசை பொருந்தலி லருந்த வர்கமே
யொநில மளிபபே மென்ற விறையனார் தாமே யீண்டு
கன்னியை மணநது செங்கோல கைபபிடித திண்புநாலும்
பன்னிய தமிழ்ச்சீ ரோங்கிப பளகறு பாண்டி நாட்டில். (௧)

உத்தர திசையி னெல்லை புதுவென விளக்க மான்கொள்
ளத்தர தருளாற் போநதிங் கருட்பெருந துறையைச சாரின்
பத்தர வளவெள் ளாற்றுப் பாங்கரி னுத்தாற் றேவர்
நத்தர வபனூர் நாடு நகரரி மழவூ ரமமா (௨)

இங்கண் முக்கட் செல்வர்க் கிடையறு வன்பு தாங்கி
[illegible]கத் தூய்மை யாதி மருவிப்புல் லறமு ஞற்றிய
பொன்னக மனைய செல்வம் புண்ணியம் வளர்ப்போ ரென்றும்
பன்னக வணியார் பூதி பரவுகண் மணியார் பண்பார். (௩)

நல்லசீர் நாட்டுக் கோட்டை நகரத்தா ரெனப்பேர் பெற்றுச்
சொல்லரும் புகழா லோங்கித் துலங்கிய வணிக மாக்க

னெல்லையின் மங்கை வாய்ந்த வித்தலப் புராணஞ் சொல்ல
வல்லவர் தேடிய பாடும வகைசெய நினைத்து நிற்க. (௪)

அன்னதை யுணர்ந்தன் றெரி லன்புரு வாய கோமான்
பன்னருங் கலைக ளாதி படித்தமுந் தடைக்கப் பேந்தரன்
றன்னருந் தவத்தில் வந்த தநயன்செல் லப்ப நாமக்
கன்னன்றன் னறிவா லாய்ந்து கருதிது முடிப்பத் தக்கோன். (௫)

இவனென மனத்து ளெண்ணி யினிதுசொற் றியற்ற வேண்டச்
சிவன்றிரு வருளே யென்று சிந்தித்துச் செய்யு டோறு
நவநவ வணிக டோன்ற நல்லகற் பனைகள் சான்ற
உவமையில் புராணமாக வுரைத்தன னவன்யா ரென்னில். (௬)

நெல்லையங் கன்ன லென்ன நிகழ்த்திடு நெல்லை நாட்டுள்
ளெல்லையில் வளமார் சேறை யெனுந்நாமத் தானக் கல்வி
வல்லுநர் முதன்மை மிக்கு வான்முக வூரில் வாழ்வான்
சொல்லரு மமுதா செந்தேன சுவையுறக் கவிசொல் நல்லோன். (௭)

கற்றவர்க் கன்பு காட்டுங் கருணைமா விராம சாமி
நற்றவப் புதல்வ ராக நவிலரு ணாச லப்பேர்
பெற்றபா வலவன் வேள்சுப் பிரமணி யச்சீர்ப் பேரை
யுற்றவற் கிளையான் பாவி லொருவர்க்கு மிளையா வோங்கல் (௮)

கேட்டவர் செவிக்கின் பெய்தக் கிளத்துநாற் கவியில் வல்லோன்
கோட்டணி முகத்தன செவ்வேள் கோகன கம்போற் பாதத்
தோட்டலர் மதுவையுண்டு சொலற்கருங் களிகொண் டுள்ளம்
வேட்டது பெறுமென் னன்பு மிகுக்கந்த சாமி வேளே. (௯)

தனைநச்சி னார்க்கினிய ரடியார்க்கு நல்லார் சம்புபரி மேலழகர் சதுமறைநக் கீரர், முனிவரர்பே ராசிரியர் கன்னிநாட்ட ரிபோன் முழங்குசேனாவரைய ரரசஞ்சண்முகனார், வனைபுகழ்ச்சுந் [illegible] விறையனார் திருமுன் வணிகர்குழா மிருந்திந்நூன் மகிழ்[illegible] னவி, யனைவருமோர்ந் ததிசயித்து வேண்டுவன வளித்தே[illegible]ற்று வித்தனராலவரூழிவாழி. (௧௦)

சாற்றுக்கவிகள் முற்றிற்று.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.



# அரிமழத்தலபுராணம்.

## பாயிரம்

### காப்பு

பொன்பரவ வெண்கயிலைப் பொருப்பாக கிமையவர்
பொறுக்க வொண்ணா
பின்பமுற மணநகலா நின்றெறிப்ப வளர்ந்துகனை
யிறைஞ்சிப் போற்று
மன்பருளந் தொறும்பூத்துக் காயாது கனிபுமுக்தி
யடியி னீழன்
முன்பரவிப் புகுந்தவரே வெம்பிறவி யிகந்துகல
முழுது வாரே.

### பரமசிவன்.

பலதி றத்தமா நதிகளுந் தன்வசப் படுத்திக்
குலவு வாரிபோற் பலதிறச் சமயமுங் குறிகி
நிலவு றப்புரி சைவநா யகனெனு நிமல
னிலகு மெய்ப்பதத் துணையலாற் றுணைபிறி திலையே. (௧)

### உமையம்மை.

பங்கயமுங் குவலயமு மாம்பலுஞ்செங் காந்தளுமாம்
பலபூப் பூத்துக்
கொங்குலவு தளவரும்புங் கோங்கரும்பு மருப்பிவரக்
கொண்டு மேலாக
தங்கவரை யிடைப்பிறந்து வெள்ளிவரை யிருக்குமுக்கட்
டருவின் மீது
துங்கமுறப் படர்ந்துமணந் திருக்குமொரு பூங்கொடியைத்
தொழுது வாழ்வாம். (௨)

### சபாநாயகர்.

வண்டாட விரியிதழி மலராட வயங்குமதித்
துண்டாட நதியாடத் துன்னியநம மனைவிழி
கண்டாட வடியரின்பக் கடலாட விருமுனிவர்
கொண்டாடக் கூத்தாடுங் குஞ்சிதபா தம்போற்றி. (௩)

### சிவகாமியம்மை.

உயிர்த்தொகை மலப்பிணி யொழிதர மாநட
மயிற்பொலி விழிக்கொளீஇ யம்பலத் துவாழ்
குயிற்பெடை மரகதக் கொழுந்து பைஞ்சுக
மயிற்பிடி யனையதாய் வணக்கஞ் செய்குவாம். (௪)

### சுந்தரேசர்.

பவளமார் புரிசடையும் பொன்னிதழி மலர்த்தாரும் பணிநி லாவுந்
தவளநீற் றொளிநுதலுங் கருணைபொழி விழிமலருஞ் சங்கக் காதுங்
கவளமத கயவுரிய மபயவர தாம்புயச்செங் கரமு முக்கட்
டுவளவிளங் கியமார்புஞ் சொக்கேச ரடிமலருந் தொழுது வாழ்வாம்.

## மீனாக்ஷியம்மை.

கருணைவழிந் தொழுகுமிரு விழிமலரும் பொன்னமர்செங் கமலம் போலுந்
திருமுகமு நிலவுமிழுங் குறுநகையும் பவளமென்த் திகழ்செவ் வாயு
மருமலியுஞ் செங்காந்தண் மலர்க்கரமுஞ் சிறடியும் வயங்கக் காட்டித்
தெருண்மருவ வெமையாளு மங்கயற்கண் ணுமையாளைச் சிந்தை சேர்ப்பாம். (௯)

## தக்ஷிணாமூர்த்தி.

ஆலமரத் தடிமேவி வாக்கிறந்த பூரணமென் பதனை மோனக்
கோலமுறீஇத் தெரித்தருளிச் சுட்டுவதற் கெட்டாத குறிப்பைச் செங்கை
மேலமைசின் முத்திரையால் விளக்கினால் வரையாண்ட விமலன் கஞ்சம்
போலமரும் பதமலரை யகத்திருத்தி வினையனைத்தும் போக்கி யுய்வாம். (௭)

## முன்றண்டவிநாயகர்.

மின்றண்ட சடைமுடியு மறுகாதி நறுமலரும் வெண்ணி லாவும்
பொன்றண்ட திருவுருவு மங்குசபா சக்கரமும் பொருவெண் கோடு
மென்றண்ட கருணையுங்கொண் டரிமழுத்தி லன்பர்குழு மெய்தி வாழ்த்து
முன்றண்ட விநாயகனைப் பன்னாளுந் தொழுவரின்ப முழுகு வாரே. (௮)

## பரிபாலவிநாயகர்.

வரிபாடு நறுங்கடுக்கை மலரானை யடியருள வாவி தோறும்
விரிவாக மலர்வானைக் குறுமுனிவன் கமண்டலநீர் விபுலை மேவப்
புரிவானை யரிமழுமா புரிவானை வெலுஞ்சிறப்புப் பொருந்த ஞேக்கிப்
பரிவாக வெழுந்தருளும் பரிபால விநாயகனைப் பராவி நிற்பாம். (௯)

## குமரக்கடவுள்.

திகந்தவரை வாணியனென் றறிந்துமறை யவனென்னச்
செப்பி வந்து
புகுந்தவனைச் சிறைப்படுத்தி வடுகனுக்குத் துணையாகப்
புடவி போற்ற
மிகுந்தவிடை யனுக்குரிய விழிவலைச்சி புத்திரனு
மேவி யன்பாற்
றகுந்தயார் பாரிகளோ டிணங்கியுறை செட்டிபதந்
தலைமேற் கொள்வாம். (ய)

## பாலதண்டாயுதபாணி.

ஞாலமுண்டாஞ் செல்வமுண்டா நன்மக்கட் பேறுமணக்
கோலமுண்டாங் குணமுண்டாங் குறைவிலா வாயுவுண்டாஞ்
சீலமுண்டாஞ் சிறப்புண்டாந் திருவளரு மரிமழுத்துப்
பாலதண்டா யுதபாணி பாதபங்கே ருகந்தொழவே. (கக)

## செல்லத்தையனார்.

மறங்காட்டுஞ் சமர்க்களத்து மாற்றலரோ டெதிர்த்தவர்க்குத்
திறங்காட்டிச் செண்டுகொண்டு செருச்செய்து திகைந்தன்னார்
புறங்காட்ட வயமேவிப் பூரணைபுட் கலைபதியா
யறங்காப்போ னுஞ்செல்லத் தையனு ரடிபோற்றி. (கஉ)

## முத்தையனார்.

செய்யவளைத் தன்மனையாச். சேர்ந்தநெடு மாலான
தையலிடத் தையனரு டாவருமாண் டலைத்துவசக்
கையனைரக் கரியுகைக்குங் கடல்வண்ண னறங்காக்குந்
துய்யவன்முத் தையனடித் துணையென்றுந் துணையாமே. (கங)

## வயிரவர்.

மூவிலை வேலவன் முத்தன் பைந்துழாய்த்
தேவனைத் தோர்பெறு தீர்த்தன் ஞாலியூர்
காவலன் றிகம்பரன் கபாலி காளிதன்
சேவடி மலர்களைச் சிந்தை சேர்த்துவாம். (கச)

## விளங்கியம்மன்.

களங்கரிய பரனுகங் கலந்தபரை யபிசமாய்த்
துளங்கலிலா தரியுகைத்துச் சூலமெடுத் தொளிநயனக்
குளங்கனின வலகையெனுங் கொடிபிடித்தெண் டோள்படைத்து
விளங்கியம்ம னெனுநாமம் விளங்கியம்மை பதம்பணிவாம். (கரு)

## சரசுவதி.

பூமகளை மலர்மகளைப் போலாது தன்கருணைத்
தேமுதவி யறநெறியிற் செலஞானச் சுடர்காட்டிக்
காமுறுமா ருயிர்க்கின்பக் கதியளிக்குங் கலைமகளா
நாமகளை யஞ்சலிப்பா நமதுவினை யுஞ்சலிபபாம். (கசு)

## திருநந்திதேவர்.

சாத்தி ரப்பொரு ளார்தனி
வேத்தி ரத்தவன் மெய்க்குரு
கோத்தி ரத்தலை வன்பதந்
தோத்தி ரிப்பது நந்தொழில். (கஎ)

## திருஞானசம்பந்தசுவாமிகள்.

அங்கமறை யருள்புரியுஞ் சங்கரனார் பலியேற்க
வணியக் கொள்ளு
மங்கமிரண் டையுநீங்கப் புரிவான்கொ லெனத்தம்மு
னடையுந் தோறு
மங்கதிகஞ் சங்கையுறத் திருமயிலை வணிகர்சுதை
யங்கந் தன்னை
யங்கனையாம் படிபாடும் பிரமபுரப் பெம்மான்பொன்
னடிகள் போற்றி. (கஅ)

## திருநாவுக்கரசுசுவாமிகள்.

சூழ்ந்ததமிழ்ப் பிரமபுரப் பிள்ளையார் சிவிகையைத்தாஞ்
சுமந்து பின்னர்
வீழ்ந்தடியி லவர்வணங்கித் தழீஇக்கொள்ள வொருங்கேகி
வியன்ஞா லத்துத்

தாழ்ந்தவரே யுயர்வரெனும் பழமொழியை விளக்கியிட்ட
தாலத் தேவை
யாழ்ந்தமனத் தொடுநினைந்து துதிபுகன்று வணங்கியவ
ரருள்பெற் றுய்வாம். (கக)

### சுந்தரமூர்த்திசுவாமிகள்.

சங்கிலியாற் றொடக்குண்டு பரவையிடைக் களித்தாடித்
தமிழா றூன்று
துங்கமத மழைபொழிந்து வினைத்தருவை யெறிந்துசத்தி
துலங்கு பாகன்
கொங்குவளம் பெறக்கொடுக்கு முணவுண்ட சுந்தரனுங்
குஞ்ச ரத்தின்
செங்கமலத் திருவடியெஞ் சிந்தையெனுந் தடத்தலரச்
செய்து வாழ்வாம். (உ0)

### மாணிக்கவாசக சுவாமிகள்.

என்னூற்கு மெய்பொருட்கு மிறைவன்மலர்த் திருக்கரந்தொட்
டெழுதச் செய்த
வன்னூற்குக் கவிநாதன் கோணிதியைச் சம்புவுக்கே
யாக்கும் பண்பான்
முன்னூக்கு பரியுமதை யுகைப்போனுஞ் சம்புவென
மொய்ம்பிற் கொண்டு
பன்னூற்கு நலங்கொடுக்கும் வாதவூர் வள்ளலடி
பரவி வாழ்வாம். (உக)

### தண்டியடிகள், மற்றைநாயன்மார்.

தருமநெறிச் சிவபூசைக் கூறுசெயுந் தந்தைபதந்
தடிந்து பூவின்
மருவுசிவ பணிக்கூறு புரிபவரைத் தண்டிக்கும்
வலியா ரென்னப்
பொருளமையும் படிதண்டி யடிகளாம் பெரியரடிப்
போதை மற்றைத்
தெருண்மருவு சிந்தையடி யவர்குழுவை யெந்நாளுஞ்
சிந்தை சேர்ப்பாம். (உஉ)

## குலகுருவணக்கம்.

நிலமிசையின் பத்திவலை கொண்டடைவா ருளங்களிப்ப
நேர்மை யாகி
யிலகியசின் முத்திரைக்கை காட்டலுடன் பூதிமணி
யினைந்து காவி
நிலவுடைய தாக்கொண்டு மீதுறைசை வலம்பெறவே
நெடிது வாழ்ந்து
நலகருணைத் தடமாமம் பலவாண குருமணியை
நயந்து வாழ்வாம். (உங)

## வாழ்த்து.

எத்தலத்து மிகச்சிறந்த வரிமழுத்தி லெழுந்தருளி
யிருக்கும் வேத
வித்தகன்சீர்க் கதைபாடு வித்தவர்சொன் னோர்கேட்டோர்
வியன்ஞா லத்திற்
புத்திரருஞ் செல்வமுந்தீர்க் காயுவும்பல் வகைச்சிறப்பும்
பொருந்தி வாழ்வர்
நித்தியமாங் கதிபெறுவர் வான்பொழியும் வளம்பல்கு
நிலத்து மன்னோ. (உச)

---

# புராணவரலாறு.

அல்லாருங் குழலுன்மயா ளிடப்பாலு மழுமானு
மகற்றிக் கன்னல்
வில்லாளி யுடல்பொடித்துத் தன்னையுணர் மெய்யடியார்
வினைவிட் டோடக்
கல்லாலி னெழுந்தருளுங் கடவுணந்திக் கருளவவன்
கற்ற கேள்வி
வல்லானுஞ் சனற்குமாரற் கோதவவன் வியாதனுக்கு
மாபிற் சொற்றான். (உரு)

நாவாயிற் றோன்றுமவ னவ்வியாற் சூதனுக்கு
நவில்பு ராணக்
காவாகு மூவாறி னுயர்ந்திலங்கும் பிரமாண்டக்
கற்ப கத்திற்
றூவாத வருண்மணமு மன்புமது வும்பொருந்துஞ்
சைவப் போது
மீவாழும் படிவிரிந்த பலகிளைக ளுளவவற்றின்
மிளிரு மொன்றில். (உசு)

பத்திரச நனிபொழுகப் பழுத்தசெழுங் கனிபோலும்
பணியா ரங்கொள்
பித்தனென வந்தருளுஞ் சுந்தரே சன்பெருமைப்
பெருக்க மிந்த
வுத்தமமாங் கனிரசத்தை யுண்டுபவப் பிணிமுழுது
மொழித்த மோலோ
ரெத்திணைய ருரைப்பரிதா லரிமழுத்தி லிருப்பவரி
லென்று நல்லோர். (உஎ)

சிவநேயப் பெருஞ்செல்வர் பூதிசா தனவகையிற்
சிறந்தார் முன்னைத்
தவமேவி நிதியாதி தழைத்தோங்குந் தனவணிகர்
சைவ மோங்க
நவமான திருப்பணிகண் முதற்பலவும் விருப்பணியெந்
நாளுஞ் செய்வோ
ருவ...னஞ் சொலற்கரியா ரிரப்பவர்க்குக் குறிப்பையறிந்
துதவு நீரார். (உஅ)

இந்நகரிற் பலகுலத்தா ரிருந்தாலு நகரத்தா
ரிவரோ யென்ன
மன்னுலகி லெல்லவருஞ் சொல்லவரும் புகழாளர்
வாய்மை மாறார்
முன்னுரைசெய் சுந்தரநா தன்பெருமை யியற்பாவான்
மொழிவித் தேத்த
நன்னருளங் கருதியுற்று ரன்னவருள் ளன்பாலே
நம்பா லெய்தி. (உகூ)

மூத்தலத்துஞ் சிறப்புடைத்தாய் முத்தலத்து வழித்திவள்செய்
மூதூ ரான
வித்தலத்துப் புராணமதைப் புத்திமிக்கத் தமிழ்க்கவியா
லிசைத்துப் போந்தா
லெத்தனைத்து மிசைபரப்பு மெங்குலத்தார் சிறப்பதனி
யேற்பா ரீது
கைத்தலத்தா மலகமென்று ரெங்ஙனம்பா டுதுமென்னக்
கலக்கங் கொண்டேம். (௧௦)

ஆனாலுஞ் சங்கரனா ருளதுவு முற்றுவிப்ப
தாகு மென்றுந்
தேனாலுஞ் சீரகத்தார் புணிவணிகர் தமதுண்மைச்
சிந்தை யாதிற்
போனாலு மதுமுடியு மென்றுமன மொன்றுதலும்
புகன்றேந் தேவர்
கோனாலுஞ் செயற்கரிதைச் சிறுதுரும்பு மிறையருளாற்
கூட்டு மன்றே. (௧௧)

## அவையடக்கம்.

திருந்தாத மொழிச்சிறுவர் சிறுவீட்டின் மணற்சோறு
செய்து வைத்தே
விருந்தாக வச்சோறு மட்கறியும் படைத்துண்ண
விளம்பி னாலும்
வருந்தாமன் மகிழ்ந்துதந்தை தாயர்நன்றென் றுவப்பெய்தும்
வழக்காற் கல்வி
பொருந்தாதேன் புகலுமிந்தப் புன்மொழியு நன்மொழியாம்
புலமை யோர்க்கே. (௧௨)

## பாயிரமுற்றிற்று.

ஆகச் செய்யுள் ௧௩.

---



# நாட்டுப்படலம்.



உலகெலாம் போற்றும் வெண்ணிலா மரபி னோங்குமன்
னவர்புரி தவத்தாற்
றிலகவா ணுதலெம் பிராட்டியும் பிரானுந் தேவர்சே
னைபதி யாகி
நலமுறப் புரிந்த குமரனுஞ் செங்கோ னடாத்திய
மாண்பினு லேனைத்
தலமுறு பற்பன் னாட்டினுஞ் சிறந்து தழைப்பது
பாண்டிநன் னாடு. (க)

பருப்பதங் கான மருதமம் புராசி பயிறரு வளனெலா மொருங்கே
யிருப்பது கும்ப சம்பவ னாதி யெண்ணிலா முனிவர ருளத்து
விருப்பது தமிழுந்தென்றலும் விரவி வீசுபு விளங்குதென் பொதியப்
பொருப்பது நாலெண் வகையற மியாண்டும் பொலிவது பூழிய னாடு.

விண்ணவர் நாட்டிற் சிறந்ததென் பதனை விளக்குபு
பத்துநா றுன
கண்ணவன் மகட்குங் கருணையங் கடலாங் கடம்பணி
தடம்புய வேட்கும்
பண்ணவர் குழமித் திருமணம் புரிந்த பரங்கிரி
முதற்றலம் பலவு
நண்ணிய பெரும்பே றுடையது நீதி நடையது
பாண்டிநன் னாடு. (ந)

பங்கயா சனனுஞ் சங்கபா ணியுமேற் பறந்துகீழ்ப்
பாய்ந்துகா ணெண்ணக்
கங்கையார் வேணிக் கருணையங் கடலாங் கண்ணுதன்
மான்மழுப் பிடித்த
செங்கையா ரெண்ணெண் டருவிளை யாடல் செய்தநா
டுயர்ந்ததென் பதற்குச்
சங்கையார் கொள்வா ரொப்புயர் வின்றித் தழைப்பது
தெளரிய னாடு. (ச)

வில்லவ ளுடு நேரிய ளுடும் வியன்றமிழ்
நாடெனா வொருங்கே
சொல்லவந் திடினு முழுமுதற் கடவுள் சொற்றமிழ்ப்
புலவரோ டினிது
புல்லிமுற் சங்கத் திருந்தமி ழாய்ந்து பொற்பினை
நினைந்துநாண் டொரீந்த
மல்லலங் கல்வி செல்வமெய் யறிவு வளர்வது
தென்னவ ளுடு. (கூ)

மழை.

பெருந்தாலத் தோகையைமே வினைக்குகையான் முசவிதிறம்
பெற்ற வானந்
திருந்துவன மாலெனும்பேர் சேர்தலினுற் சிந்துவிடைச்
செறிவுற் றஙகண்
பொருந்துபெரும புவனத்தைக் கைக்கொண்டு மேன்மைமிகப்
பூண்டு மீண்டு
விரிந்ததலை நாகமிசைத் தாய்ப்புரவுக் குரியதென
விளங்கிற் றன்றே. (சு)

இலங்கியவித் தகைமையுறு கருங்கொண்டன் மிகமுழக்க
மெய்தித் தென்றல்
விலங்கலிடைப் பலவமைபுத் தாரைகளைச சொரிந்துறுதல்
விண்ணோர் வேந்தன்
பலம்பெறுதன் பழும்பகையாம் பருப்பதத்தைப் பொருதுவரும்
படிவிற் கொண்டு
துலங்கியிரும பலவம்புத் தாரைவிடும் பான்மையெனத்
தோற்று மாலோ. (எ)

தாணுவெனும் பெயருறலாற் சங்கரனென் றகங்கருதுஞ்
சங்க பாணி
மாணுறுமஞ் சனமாட்டி மலர்தூவிச் சுடர்காட்டி
வழுத்தன் மானுஞ்
சேணிருந்து வரைமருவி நீர்பொழிந்து மணிசிதறித்
திகழ மின்னிக்
காணுமொலி தூக்குமுறல் காத்தலைப் புவிக்கியற்றுங்
கரியகொண்டல். (அ)

கனிவுடனென் மகண்மணந்த கந்தனுக்குத் தம்மகளைக்
களிப்பாத் தந்தே
யினியவென்புத் திரிவாழ்விற் பாதிகொண்டு மருகனையங்
கிருத்தும் வெய்ய
கனிவலிமைக் குறவர்வரை தனைப்பொருக வெனப்போகி
நவில மிக்க
தனிதமொடு முற்றுகையிட் டதுபோலும் வரைமேவித்
தழங்கு மேகம். (௯)

## குறிஞ்சி.

பூதி மேனியு மாநந்த வெள்ளமும் பொருந்தி
யோது வேணியுந் தண்டமுந் தோலுமே வுற்றே
யாதி நாயக னடிநினைத் துறுமருந் தவர்போன்
மீது லாவும்வேள் காவலின் விளங்குமவ் வெற்பு. (௧௦)

குறவர் தஞ்சிறுர் வரைமிசை யேறியே குலவு
நறவெ டுத்தவண் கும்பத்தில் விடுத்தனர் நகைத்துப்
பிறக ளைப்பிழி மழுகெலா மவ்விடைப் பிறங்கு
நிறைதெ ரிப்பவர் போற்றுலாத் திடைவைத்து நிற்பார். (௧௧)

தரக்கி னக்குழா மிடபத்திற் சிற்சில சாடிப்
பொருக்கெ னப்புகப் பயத்துட னம்புலி போகும்
வெருக்கொ ளபபெரு வீறிட்டு மேவுகை விலங்கங்
கிருக்கும் வாளரி நோக்கலுங் கீழ்விரைந் தெய்தும். (௧௨)

வன்னி யாதலி னம்மரு மேடமேன் மருவுங்
கன்னி காரமுற் றிடமிசைப் போங்கன்னி காரந்
துன்னு பத்திரந் தனுசுமே லியைபொடு தோயு
மின்னு நற்சுனைப் பாணியிற் கடகமு மிளிரும். (௧௩)

### வேறு.

விண்டொடச் செலுஞ்சிறை மேவப் பெற்றநீ
மண்டொடக் கீழ்ச்செல்வாய் மாய்தி யென்றல்போ
லெண்டிசை யிலுமுறு மியற் புற்றெறலாங்
கண்டுறிஞ் சினதெறுங் கரடி யீட்டமே. (௧௪)

கொம்பெனிற் கிளைபிலாக் கொம்புங் கொம்புகொ
லெம்பெருங் கொம்புகட் கிணையுங் கொம்புகள்
பம்புமெல் விலங்கினும் பார்க்கொ ணுவெனக்
கும்பொடு களிப்பன குலவு மாணினம். (கரு)

வழுத்துமில் வரையிடை வரா ழும் வல்லிய
மழுத்துறு பசிக்கும்புல் லருந்து முமையால்
விழுத்தகு வறுமைபான் மெலிந்துந் தீதுறு
வொழுக்கமுற் றயர்ந்தவர்க ளுவமை சால்வது. (கசு)

வேறு.

அடுப்பவரை மலர்முகத்தோ டங்கைவிரித் தழைத்துவந்து
மடுத்தபல சுவையமுதம் வழங்கலுறு மாண்பினர்போ
லெடுத்தமலர் முகங்காட்டி யினியதளிர்க் கரம்விரித்துத்
தொடுத்தபல சுவைக்கனியுஞ் சொரியுமுயர் சோலையெலாம். (கஎ)

பெரும்பொருளுஞ் செல்வாக்கும் பெற்றாலுங் கொடியவர்பால்
விருந்தினர்கள் செல்லாமே விலகியகல் பான்மையெனத்
தருஞ்சிறந்த மணமலர்கொள் சம்பகமும் வேங்கைகளும்
பொருந்துவெம்மை யுறுதலினாற் புகுதாபல் வண்டினமே. (கஅ)

கதம்பமிறைப் பதுவென்ன மகரந்தங் களைவீசு
மிதந்தருபன் னீரென்ன வினியபனித் துளிசிதறும்
விதங்கொளிலை கனிமலர்கண் மிக்கதொனி யோடுதரு
விதம்பெரிது மணப்பந்தர் நிலைகாட்டுஞ் செழுஞ்சோலை. (கக)

இரவிருடு பகலினிலும் வெம்மையொளி யின்மையினாற்
பரவிவரு கடுங்கதிராம் பகைவனுக்குப் பயந்தொதுங்கி
விரவிமனக் கலப்பெய்தி மிளிர்பனியு மிருளுமிரு
மிருளுமடுத் தொளித்திருக்கு மிடம்போலு மிச்சோலை. (உ0)

வேறு.

நீதியிறை யாற்கொடுமை மறைந்துகொடுங் கோலொழிந்து
நிலத்தோ ருள்ள

மீதுபெரு மகிழ்ச்சிநிறைந் துறுவதுபோன் மிருமழையான் விலங்கும் புள்ளு
மோதியொடு குடம்பையிடை யொளிப்பவெம்மை சிறிதுமிலா தொழியத் தென்னன்
பூதரமெல் லாங்குளிரும் வெள்ளமுமே யிடங்கடொறும் பொலிந்த மாதோ. (உக)

வேறு.

விண்ணிடை யிருந்து வீழ்தரு புனலை விருக்கங்க டளிர்க்கையாற் கவர்ந்து
நண்ணிய தறிந்து காலலைத் தடுத்தோர் நளிர்பெறச் சிதறுமித் தோற்றம்
புண்ணிய ரொருவர்க் கீதரு பொருளைப் புகுந்திடைக் கரந்தவர் தம்மைத்
திண்ணிய னொருவன் புடைத்தடுத் தவர்க்குச் சேர்த்திட லாமெனத் திகழும். (உஉ)

வேறு.

குங்கு மத்தொடு மாலைசெஞ் சந்தனங் கொண்டு
பொங்கு வாசமும் பற்பல பணிகளும் பொருந்தி
வங்க வாரிசெல் பொருநையந் தண்ணதி மகிழ்தாய்
தங்கு மில்லம்விட் டன்பனிற் சேர்பவட் டகையும். (உ௩)

நிரைகொள் பல்வகைப் பொருட்செருக் குடையவர் நிலத்தின்
மருவு தம்பவர் தமையுந்துன் புறுத்துதன் மான
வரையி னின்றெழு தாமிர பர்ணிதான் மன்னுங்
கரையு டன்றருக் களையலைக் கரங்கொடு கடிக்கும். (உச)

விலகு பன்மர வளைகிளைக் கனிபல வீழ்த
விலகு மெம்மினத் தெதிரியோ வெனச்சின மெய்திப்
பலதி ரண்டகல் வீசலும் பயங்கொடு பணிவாய்
நிலவு கப்பமிட் டிறைஞ்சுதலும் போன்மென நிகழும். (உ௫)

வேறு.

ஒளிர்தரவோ ரிடம்படினு முடலனைத்து மயிர்பொடிப்பக்
குளிர்வதனு லாவமென் றுங் கொண்டவர்க்குச் சுவைகொடுத்து

விளிதலுருச் சித்தமகிழ் மிகவுதவுந் தன்மையினாற்
றெளிதருநல் லமுதமென்றுஞ் செப்புவது தேற்றுநதி. (௨௬)

அடுத்தவுட னளிர்மிகையா லாகமெலாம் விதிர்ப்பியற்றித்
தொடுத்தவிசை யாலொலியா லெவர்மனமுந் தானுக்குறுத்தி
யெடுத்துரைக்கப் பலவிதமா மின்பமேன் மேல்வளர்க்கு
மிடித்துரைத்து நலஞ்செய்யு மினியவர்தம் மியல்பென்ன. (௨௭)

ஊணுரிய பலபொருளு முண்டாக்கிக் கொடுத்தெவருங்
காணும்வகை தானுமுண வாயிருந்து களிப்பித்து
நீணிலத்து வாழ்பவரை நிச்சலுமோர் தாய்போலப்
பேணுவதா லிணையில்லாப் பெட்பினதிப் பேராறே. (௨௮)

கந்தனிரு கழல்பரவிக் கைகுவித்துக் கானவர்கள்
சந்தநறுந் தருக்குலத்தைத் தறித்தொதுக்கித் தழலூட்டிச்
செந்தினையு மலைநெல்லுஞ் செழிப்பவிதைத் தனரம்மா
வந்திலுறு வேட்கைவினைக் காகரமே யாமன்றே. (௨௯)

வேறு.

குளிர்பொறுக்க மாட்டாமற் குவட்டரசு கொண்டமயிர்க்
கூச்ச லென்ன
நளிர்தழைத்த முளைமுளைத்துப் புனமனைத்தும்
பருவமுற்றி நண்ணு மெல்லைத்
தளிரகற்றி மரமொடித்துப் படகமிட்டு
மிசையிருந்து தட்டை தாங்கி
யொளிர்மணிக்கற் கவணிரப்பி யுங்கிருந்தார் கொங்கிருந்தா
ருடைய மாதர். (௩௰)

நெடியு நல்லுறு வேட்டுறும் பறவைக ணிற்குங்
கொடியர் கற்களால் வருந்தியே மீள்வன குறைநீர்ப்
படியிற் பாவல ருலுத்தர்பாற் பொருள்பெறப் பாடிக்
கொடியர் சொற்களால் வருந்திமீள் வதுநிகர் குறிக்கும். (௩௧)

கொடிக்கு நேரிடைச் சியர்தம துரைநலங் கொள்வா
னடுத்த கிள்ளையும் பூவையு மிரிந்திட வடிப்பார்
படிக்க வந்தவர் தமக்குத்தாம் படித்தமை பகரா
மடக்கொ டுஞ்செயற் கற்றறி பேதையர் மான. (௩௨)

தந்த தரமெனுஞ் சிற்றிடைப் பணைமுலைத் தளவத்
தந்த மாதரார் வீசிய தனிமணி யிணங்க்
டந்த வேலியின் புறத்திடைத் தயங்கலத் தந்தந்
தந்த மாமணி யாமெனச் சாற்றலாந் தகைத்தே. (௩௩)

இரும்பு தோற்றிடு மெய்யின ரிருண்மரு ணிறத்தர்
திரும்பு கோளில ரமரிடை க்கானவர் திரள்கள்
கரும்பு தோற்றிடு மொழியினர் கமலத்தின் மருவுஞ்
சுரும்பு தோற்றிடு விழியினர் தோகையர் பலரும். (௩௪)

வேறு.

மான்முதலா யினபடுப்ப வலைவிரிப்பர் சிலவேட
ரேனமுத லியவரவில் லெடுத்துறுவர் சிலவேடர்
தேனினிய கனியெடுத்துத் திரிபவர்சிற் சிலவேடர்
கானமருங் கிழங்கெடுத்துக் களிப்பவர்சிற் சிலவேடர். (௩௫)

உருவாலே யரக்கரெனற் கொருகுறைவக் கிரதந்த
மருவாமை யெப்பொழுது மலையார்கள் விலங்குகளோ
டொருவாத நட்பினர்போ லொருங்குறைவா ரிரும்பனையார்
தெருவாசல் வீடெனுஞ்சொற் செப்பறியாத் தலவாசர். (௩௬)

இந்திரனன் பாற்றருமோர் பூங்கொம்பை யடைந்தருக
னிணையவேடர்
தந்தவொரு மலர்கொம்பைத் தானுறுமுன் னொருகொம்பைத்
தாங்கித் தன்முன்
வந்தவன்மற் றொருகொம்பை மருவிவரப் புரிந்துபின்றுன்
மணந்து வாழுங்
கந்தவரை வளன்முழுதுங் கழறுவரார் துர்க்கைநிலங்
கருதிச் சொல்வாம. (௩௭)

பாலை.

பொருப்பனைய நெடுந்தடத்தோட் காளையர்க்குந்
தளவநகைப் பூவைமார்க்கும்
விருப்பமிக மிகப்பெருகு மன்புநீர் தனைக்கடக்க
விடுவ தல்லாற்
பருப்பதமா நதிவாரி விண்ணதிமே வினுந்தன்மேற்
பட்ட ஞான்றே

யுருப்பமுறத் தருப்பைநுனித் துளித்தனைய மிலதாக்கி
யுலவும் பாலை. (௩௮)

தேங்கமழ வீங்குகுராப் பாவையின் றனைமுருங்கை
தெரிந்து தன்மேற்
றூங்கியவெள் ளணிமலராற் சாற்றுதலு மடுத்தறிந்து
தளைப்படுங் கொண்ட
யோங்குபெரும் பொன்சொரியும் பாலைநிலத் தன்மையெம்மாற்
கூறற் பாற்றோ
பாங்குபெறு மாதவரைப் புல்லைநிலப் பாடிவளம்
பாடச் சொல்வாம். (௩௯)

## முல்லை நிலம்.

அணிபெறு கடலையெ ளங்க முற்றதான்
மணிபெறு கம்பங் கதிர்வ ளர்சியாற்
றிணிபெறு துவரையுஞ் சேர்ந்த மாண்பினாற்
பணிபெறு மாலெலாங் குடும் பரந்த கானகம். (௪௰)

பருப்பசுங் காய்வெடி பன்னற் செஞ்செடி
யிரும்புவி யவர்தனக் கின்ன லாற்றினு
மொருங்கவர்க் களிபுரி யுயர்ச்சி யால்வரும்
பெரும்புகழ் தழுவிய பெற்றித் தொகருமால். (௪௧)

மீந்திடு பெரும்பொருண் மேவு காலையிற்
றூந்தலை வணங்கிடாத் தகவி றன்மைசேர்
மாந்தர்போற் கம்பின மணிநதி ரட்கதிர்
போந்துழி நிமிர்தலை பொருந்து மெங்கணும். (௪௨)

பண்டுமா லாயர்தம் பதியி லியாவருங்
கண்டிடா வேலையிற் கரந்து வெண்ணெயை
யுண்டபின் வேண்டுமென் றெளித்து வைத்தபல்
லுண்டையே யாமென வொளிரு மாம்பிகள். (௪௩)

சொலத்தகு பூவையின் பூவின் சூழலி
னலத்தரு மாம்பிக ளண்ணல் கண்ணனீ
விலக்குதி கரத்தலை வெண்ணெய் கொள்கெனு
நிலத்திருத் தருவது நிகரு மேவால். (௪௪)

ஆடக மெனும்பெய ரடுக்கு மென்னவே
நாடக மெங்கணு நவிலப் பொன்னிற
நீடிய துவரைக ணெடிது பல்குவ
மாடமுங் கடலையு மான மல்குவ. (சரு)

வாடிவந் தவர்க்குத்தாம் வறுமை யெய்தினும்
பாடுபட் டமுதிடு பண்பு ளாரென
வாடவர் கோடையி னுழந்த கூவனீர்
மாடுகொண் டிறைத்தவண் வளர்ப்பர் பல்பயிர். (சசா)

வேறு

விண்டாலும் விரைமுளை நகு மிக்கமணந் தரும்விளைந்து
கொண்டாலு மிடையிலிலை கொண்டாவு முணவாகு
முண்டாமிப் பலநுனத்தா லுளமகிழ்ந்து விளைந்தனபோற்
றிண்டார ணியிற்பலபாற் செறியுநல்லிய செடியினமே. (சஎ)

வேறு.

வாதமுதவியமிகுதல் குறைதலுறு திருப்பினலமருவி வாழும்
பூதவுடம்பிணைப்புரையக்கான்மாரிவெயிற்குறைவுபொருந்திடாமன்
மேதகவுருமலுறி னத்தனையும் பொன்னுக விளைந்து மேவுஞ்
சீதமலி சீரகமிந் நாட்டவ சீரகம்போலச் செழிக்கு மெங்கும். (சஅ)

வேறு

தனது நேயர்க்கு மாணவர் தமக்குமுத் தமநூ
லினையெ டுத்துரைப் பவரவர் நல்வழி யெய்த
வெனது பேர்சொலி நல்வழிப் படுத்துவ ரென்று
மனமு வந்தன முயலினம் பலபல வாழும். (சகூ)

உரிய வென்பெயர் பெறுகரி யிசையினு லுருவாற்
பெரிய வேனுமென் குமரவேள் கரமுறப் பெறுமோ
விரவி யின்புட னெய்திடக் கூவுமோ வென்று
கருவ முற்றிய கானவா ரணம்பல கனுலும். (ருo)

தம்மு யற்சியால் வருபொருண் மகிழ்வர்சற் றேனு
மம்மு றைப்பட மாதரார் வளர்த்திட வணியா
விம்மு பைந்தள வரும்புடன் மேவிய வேலை
யிம்மெ னப்பெரு விழாச்செய்து மகிழ்வர்மெல் லியரால். (ருக)

நூல்ப டிப்பவர் மறப்பெனும் பகையினை நூறிக்
கோல டிப்படுத் தொழுகுநற் குரவர்தங் குணம்போற்
காலு டைப்புறு காலையிற் களமர்கள் கைவைக்
கோல டிப்படுத் தொழுகுவ நிரைநிரை குறுகி. (௫௭)

அலவ னும்பெயர் பெறுமதி யிருதிசை யல்லா
னிலமெ லாநினைத் திடந்திசை தொறும்வர நேரான்
குலவு கட்டளை கொண்டிடான் றனதுடல் குறைவா
னிலகு றுமெனைப் போலெனு ஞண்டுக ளிலங்கும். (௫௮)

புரமெ ரித்திடு புங்கவ னணியெனப் பொலிவேம்
பெரிது மெம்முருக் கொண்டுமா லுறத்தகு பெரியோ
மரிய வைந்தையு மடக்கலின் முனிவரை யனையோந்
தரமெ மக்கிலை யெனும்பல கூர்மமுந் தயங்கும். (௫௯)

எவ்வு றுப்பினு நயனமே சிறந்ததென் றிசைப்பா
ரவ்வு றுப்பினு ளின்புற லெமக்குரித் ததனாற்
செவ்வி மங்கையர் கண்களுக் குவமையாத் திகழ்வே
மொவ்வு மெப்பொரு ளெமைப்பிற வென்னுமீ னுகளும். (௬0)

உலம்ப டைத்ததோண் மள்ளர்வின் முகில்பொழி மொழுக்காற்
புலம்ப டைத்துள பகுவ மறிதலும் பொன்னேர்
கலம்ப டைத்திடப் பூட்டிய பகட்டின நடாத்தி
வலம்ப டைத்தவே ளாண்மையாந் தொழிலினை வகித்தார். (௬௧)

சகமெ லாம்புகழ் வினைஞர்கள் பற்பலர் சார்ந்தே
யிகமெ லாந்தழைத் தியலுறச் சொல்வள மீபுந
தகுதி வேண்டினர் புலவர்கோன் றன்றுதி சாற்றித்
தொகுதி னென்முளை விதைத்தனர் வயமெறு றுந் துறுமி. (௬௨)

திங்க டங்கிய செஞ்சடைச் சங்கர னடியிற்
றங்கு மன்பின ரியாவரு நலமுறு தகைபோ
லங்கு ரங்கொடு மலிதலின் விதைவிதை யனைத்து
மங்கு ரங்கொடு மலிந்தன பொலிந்தன வம்பா. (௬௩)

## வேறு.

நாற்றினூறு வளர்ச்சிகண்டு நங்கைமார் பறித்தெடுத்துப்
போற்றரசர் முடிவிளங்கப் புனைந்தபல முடியிடுவார்
வேற்றுமையற் கொடுபோவார் மேவியநீர் வடிப்பித்துச்
சேற்றினது வளங்கண்டு சிந்தைமிக மகிழ்ந்திடுவார். (௬௪)

அள்ளலிடைக் கால்புதைய வதிருமிநட் குழல்சரியத்
தெள்ளியநன் றெறிந்துசெவ்வாயாற் குரவையிட்டுப்
பள்ளமுற வலக்காதநாற் றிதந்தழுழ வதாநடுவார்
மள்ளமட வார்தொழில்போன் மற்றுமொரு தொழிலுளதோ.

பன்னுபசி வருத்தாமற் பாலகர்க்குப் பால்கொடுத்து
முன்னிருந்து வளர்க்குமிரு முதுகுரவர் தமைப்போலத்
துன்னிவரு செழும்பயிர்க டுவளாமனீர்யாத்து
மன்னியவு தினங்காத்து வளர்த்தார்கண் மள்ளர்களே. (௬௬)

தம்புதல்வ ரொடுகொடியார் சார்ந்துவரிற் சகியாமல்
வன்பினொடு துரத்திவிடும் வழக்கென்னப் பயிர்நடுவிற்
பம்பிவரு களைகளைத்தாம் பார்த்துமனஞ் சகியாமே
வெம்பிமுழு வதுங்களையும் விளைக்குமட வார்புகுந்தார். (௬௭)

## வேறு.

தனத்தினேரென வரும்பியுங் கரத்தொடு தகைவ
தனத்தினோரென விரிந்துமெம் போலொரு தைய
றனைச்சு மந்தும்வேள் பாணமாய்ப் பங்கயந் தழைத்த
றனைப்பொ றேமென வெகுண்டெனக் களைந்தனர் சார்ந்தே

கஞ்ச மாமல ரதனினுங் கொடியையைங் கணையாய்த்
துஞ்ச வேசெய்வா யெமதுமைக் கண்ணெனத் தோற்றிச்
செஞ்ச வாழ்தியோ நினைவிடே மென்பர்போற் றேசின்
விஞ்சு மாதரார் குவலயங் கொய்தனர் மீள்வார். (௬௯)

அல்லி தாமரை குவளைபா லணுகுறு மமைய
மெல்லி யார்கரம் பதங்களின் வீழ்சிறைவிரிமா
வல்லி யீரெம திருக்கைகாப் பீரென வழுத்தி
மெல்ல வேகரத் தொடுபதம் பிடித்தென விளங்கும். (௭௦)

## வேறு.

குருமுறையிற் படித்தறியா ரிறுமாப்புக் குணம்போல
மருவுபயி ரினங்கடலை வளையாமல் வளர்வெய்திக
குருமுறையிற் கல்விமிகக் கொண்டவர்தாழ் குணம்போலக்
கருமுதிர்ந்து கதிர்பொருந்தக் கவிழ்ந்தனசெந் சாலியெலாம்.

கட்டழகு பெறுஞ்சிறுவர் கல்வியுறி னொழுக்கத்தாற்
சிட்டரெனத் தெரிக்கவுடன் சிந்தைமகிழ் தந்தையர்போ
லிட்டபயிர்க் கதிர்மணிபோன் றிலங்குதலு மகிழ்ந்திருந்து
நட்டுவந்த காலையினு நன்குவந்தார் கம்பளர்கள். (எ௨)

## வேறு.

கருவுற நிமிர்ந்த பைங்கூழ்க் கற்றைக ளனகன் கையிற்
பொருவமே வளர்ந்து விண்ணிற் போயுறுந் தோற்றந் தன்னை
யருமையி னீன்ற வன்னை யாகிய பருதத் தேவன்
றிருவடி வணங்கச் செல்லுஞ் செவ்விய வயல்க ளெல்லாம். ()

தாங்கெடச் செயினுந் தம்மைச் சார்ந்தவர் வாழ வேண்டி
மோங்குநற் குணத்தார் போல வுழவர்க ளறுத்து வீழ்த்தப்
பாங்குறை சாலி யன்னார் பாதமேல் வீழுந் தோற்ற
மீங்கெம தினத்தைக் காப்பீ ரெனப்பதம் பிடித்தல் போலாம்.

## வேறு.

தமக்குயிர்போம் படிவரினும் பிறர்க்குதவா மனவுலுத்தர்
தம்மை வேற்றோர்
சமக்களத்திற் கொண்டுபெரும் போர்புரிந்து வென்றுமுற்றுஞ்
சார்வ தேபோ
லமைக்குமணிச் சாலிவிடா வரியனைத்துங் கட்டியெடுத்
தடைந்த மள்ளர்
சமக்களத்திற் போர்புரிந்தா ரிணிப்பலனை யடைவரிது
தகைமை யன்றே. (எ௫)

வாயுநிதி வரைப்பொருது குவடுகளைப் பிச்செடுத்து
வானோர் வேந்த

னோயுமொரு துணைவமென்ன வெண்ணரியவ னிலத்தவற்றை
யிருபாலித்தாங்கு
வாயுவிரை நெடுகளமர் பலர்குழுமிப் பொன்னரியாய்
வயங்குஞ் சாலி
யாயவெலா மந்நிலத்திற் போர்புரிந்தார் சீர்புரிந்தா
ரவரே யன்றே. (௭௬)

**வேறு.**

பணைத்தபெரும் போர்பிரித்துப் பாரிடையீ ழர்சிதறித்
துணைத்தமருப் பொழுமேகத் தொகுதியெனத் தும்புகளாற்
பிணைத்தபகட் டினம்போக்கிப் பின்போய்வைக் கோலுடனே
யணைத்தமணி நெலனும்வெவ்வே றாக்கியுளங் களித்தனரால். (௭௭)

குலம்பொலியக் நாடுபொலியக் குணம்பொலியக் கோவேந்தர்
மலைபொலிய மகம்பொலிய வளம்பொலிய மனம்பொலியப்
புலம்பொலியப் பொன்பொலியப் பொருள்பொலியப் புகழ்பொலிய
நிலம்பொலியக் கலம்பொலிய நெற்பொலிவிட் டார்களமர். (௭௮)

**வேறு.**

மெய்யொடு சேர்ந்த பொய்யை வியன்மதி வலியாற் றாக்கி
யையமின் மெய்யைக் கொண்டே யாணைசெய் யிறைவன் போலத்
துய்யநெல் லினத்தி னோடு சூழ்பத ரினத்தை யுள்ளர்
செய்யகாற் றிடையே தூற்றிச் செய்தனர் செந்நெற் குன்றம். (௭௯)

**வேறு.**

ஓங்கு திண்ணிதாம் பற்பல நென்மணி யோங்க
றூங்கு பூமிமான் வரையினு மிகக்கனத் தனவாய்
வீங்கி ஞாலும்பல் லுயிர்களைப் புரத்தலான் மிகவும்
பாங்கு லாஞ்சுமை யெனலினம் பாரப்பேர் பகர்வார். (௮0)

கண்ட விப்பல னடைதரத் தொழில்செயுங் காரா
மண்டு மாபெரு வயிற்றையுந் தாஞ்சிறு வயிறுங்
கொண்ட பான்மையா னீண்டவைக் கோலவை கொள்ள
வண்டு நெற்கடாங் கொண்டனர் மள்ளரா மறிவார். (௮௧)

நகரத் தேவர்க்கு மரசர்க்கும் வினைஞர்க்கு நாடிப்
பகுமு றைப்படி யளித்தபி னெஞ்சிய பண்டிக்
தொகையி லேற்றியிற் சொரிந்தன ரூர்த்தடத் தூநீர்
வகையின் மேவிய புண்ணியச் செல்வரா மாண்பார். (அ௨)

இனிமை யாருமெம் மாதரார் கண்டமோ டிரண்டு
தனமெ னப்பெரும் பாளையாய்க் கனியதாய்ச் சாரு
நினைவி டேமுனக் கினிப்பில யென்பர்போ னெருங்கி
யனைய மள்ளர்கள் கமுகினற் பலங்கொடு மகல்வார். (அ௩)

வேறு.

தமதுமட வாரிசைக்கு நிகர்குயிலைத் துரத்துவர்போற்
சார்ந்து மாவி
னமையுமொரு சினையைவளைத் ததன்பலத்தை யவர்கருப்பொப்
பாகு மென்றே
யெமதுபுல வோர்சொலன்மெய் யேகொலெனச் சுவைத்துநிக
ரினமை யாலே
கமையிலராய் வீசியெறிந் திடுவார்கள் பலமள்ளர்
களிப்புற் றங்கண். (அ௪)

வேறு.

கண்ணுக் கினிய ராய்த்தோன்றிக் கருத்துக்
கின்னா ராயிருத்தல்
மண்ணிற் கொடுமை கொடுமையது மாறி
யுறலே மாண்பதுபோ
லுண்ணச் சுவைசா றேஞ்சுளைக ளுள்ளும்
புறத்து முள்ளுமுறும்
வண்ணப் பலவின் கனிகளொடு வாழைக்
கனியுங் கொடுபோவார். (அ௫)

அநங்கன் கரத்துத் தனுவெறிந்திங் கடுத்துப்
புதிது கரங்கொள்ள
மனங்கொண் டடையும் படிகமுகா வளர்ந்து
திரண்டு ப[illegible]தோகை

யினங்கொண் டசைந்து மணிவீசி யிறும்பூ
தெய்த வளம்படைத்துக்
கனங்கொண் டங்கங் கிடங்கடொறுங் கன்னற்
காடு கழிசிறக்கும். (௮௬)

வேறு.

முந்தைநாட் டமையுழவர் கரமடுத்து வருத்துபகை
முன்னிக் கன்ன
விந்தநா ளியந்திரத்தா னசுக்குண்ணப் பகட்டினங்க
ளிழுத்துச் செல்லுஞ்
சிந்தைநா ளுறத்தம்மை வருத்தினரைத் தாம்வருத்துஞ்
செவ்வி யோர்கால்
வந்ததேன் மெய்யுணர்ந்தா ரல்லாதார் விடாரென்ன
வயங்கு மோர்பால். (௮௭)

சக்கையுடன் மருவுதலா லெமதுமட வாரினிமை
சாரு மாற்ற
மொக்கமுழு துஞ்சுவையா யுற்றிலேகோ தொழித்தேனு
மொப்பா மென்று
விக்கணைத்து மியந்திரத்தி னிடைப்படுத்தி யாட்டியக்கோ
தெறிந்து போக்கி
மிக்கதனிச் சாறெடுத்துக் குடிப்பார்கண் மருதநில
மேவு மாக்கள். (௮௮)

வடித்தெடுத்த சாறுமினை மருவாமை யாலதனை
மண்டு தீயி
லெடுத்துவைத்துக் காச்சினரோ ரின்மையினாற் குழியிலிட்டா
ரிவ்வா றின்னற்
படுத்துதலால் வெதும்பிவெல்ல மெனப்பகரப் பின்னரகம்
பரிவு கூர்ந்து
மடுத்ததம திருக்கையிடைக் கொண்டுவைத்துச் சிறைபுரிந்தார்
மருத மாக்கள். (௮௯)

## நெய்தல்.

இணையன பலவள னெய்தி மேதகு
தனைநிகர் பணைநலன் சாற்ற லாவதே
கனைகுரற் சலபதிக் கடவு ளாட்சிசெய்
நனைமலர்க் கழிநில நவிலு வாமரோ. (சுo)

சங்கினத் தருகுமுட் டாழை வீயுறல்
பங்கயற் கிரங்கியான் பகர்ந்த பொய்ப்பிழை
சங்கரன் பொறுக்குமா சாற்று நீயெனு
வங்கெடுத் துரைப்பதற் கடுத்தன் மானுமே. (சுக)

அளவர்தம் மடவிய ரம்ப கப்பகை
கொளவளர் மீனினங் குழைக டற்புகுங்
களவறிந் தெடுத்தகன் கரைக்கு வித்தன
ருளமகிழ்ந் தளக்கிய ருணக்கி விற்பரால். (சுஉ)

வேறு.

தனிமு தற்சிவங் கடுத்திடுங் கடற்றட மான்மா
வனைய தாமதி னிறைபுன லாணவு மாக
நினைவு றுத்திடு முப்புமுப் பொருணிலை யியல்பை
வனைவ தற்கிட னுயது நெய்தலின் மாண்பே. (சுங

உலக வாழ்வெனுங் கட்டற்புகுந் தலமரு முயிர்க
ளிலகு நற்கதிக் கிறையரு ளாற்புக லேய்ப்பச்
சலதி மேவுநா வாய்கண்மீ காமனுற் றுறைக்கண்
ணுலவு பன்றுறை தொறுமடைந் துறுவன வூங்கே. (சுச)

## திணைமயக்கம்.

அவனி யின்புடைத் தனித்தனி யறுசுவைப் பொருள்கள்
சிவணி யின்புறத் திடுமவை சிறப்புறுஞ் சேர்ப்பி
னிவண மைந்திணைக் கருவுரி மயங்கலு மியல்பா
னவந யந்தழை யத்திணை மயக்கமு நவில்வாம். (சுரு)

முடிவில் வேள்வியிற் புகைமுகில் போலெழ முல்லைக்
கொடியு றங்கிளைக் காஞ்சியின் மயிற்குலங் குழுமிக்
கடிந டஞ்செயக் கண்டுபொன் வெள்ளிநீள் கனியும்
படிவில் புன்னையும் பெய்வன பார்ப்பன பானல். (சுரு)

மருத மாநிழற் றாங்குறு புலிக்குல மருள
வெருது ரப்புவ பூவைசூழ் செ.றவினி லெழுந்தாங்
கொருகை மாவொலி யிடியென நினைந்தரா வுகுத்த
குருமணிக்குல மின்னெனக் கூம்பும்வாய் குயில்கள். (சுஎ)

போதி மேலுறு கிள்ளையின் பாட்டொடு பொருந்தச்
சாதி தாமரை யாதியிற் சார்தரு சரகங்
கோதில் யாழ்நரம் புளரவேற் குகன்பரிக் குலங்க
டதின் மாநடஞ் செய்வவொத் தார்ப்பன திரைநீர். (சுஅ)

குருந்த மேவிய கறிக்கொடிக் காயினைக் கூராவி
விருந்த மந்தியின் றெரிப்பறப் பாய்வன விளாநீ
ரருந்த முன்புறு தெங்கின்மே லதலனில்வந் தமரும்
பருந்த கன்றுபைங் கிள்ளைவாழ் மருதுறும் பறந்து. (சுகூ)

உணங்கன் மீனமுத் துப்புடன் கொடுததுடன் பெறுவார்
பணங்கொண் மாமணி நானம்வேட் டத்திடைப் படுவூன்
குணங்கொள் வேழமுஞ் சாலியும் பெற்றுடன் கொடுப்பார்
மணங்கொள் சந்தமுந் தந்தமுஞ் சந்தத மறவர். (ள)

உறங்கு மியானையின் கோடுபட் டோடுமான் வீழ
நிறங்கி ளர்ந்தெழு மணியிருள் கெடுத்தொளி நிறைப்ப
மறங்கி ளர்ந்தகே சரிபுலி பாயுமுன் மருளக்
கறங்கு தெண்டிரை மீன்பல கண்மிசைக் கதுவும். (எக)

இனைய பாண்டிநாட் டெழில்வள மெம்மள வினதோ
வனைய யார்வலா ரத்திரு நாடெனு மங்கை
புனையு மங்கலம் போன்றொளி ரரிமழ புரியை
நினைவி னுட்கொடு புகலுது முள்ளவா கேர்ந்தே. (எஉ)

நாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் எஉ.

# திருநகரப்படலம்.

நிலச்சி றப்பையு நிறைபுனற் சிறப்பையு நெடியோர்
புலச்சி றப்பையும் பொருள்வகைச் சிறப்பையும் புனிதக்
குலச்சி றப்பையுங் கோமுறைச் சிறப்பையுங் குறையா
நலச்சி றப்பையும் படைத்ததா லரிமழ நகரம். (க)

பூம டுத்தது புகழணி தொடுத்தது பூங்காத்
தேமு டுத்தது செல்வமுங் கல்வியுந் திறனுந்
தாம டுத்தது சழக்கெலாம் விடுத்தது தமிழா
ரூமெ டுத்தெடுத் துரைப்பதா லரிமழ நகரம். (உ)

கண்ணு தற்பிரா னங்கயற் கண்ணியைங் கரத்தோன்
விண்ண வர்க்கிறை சிறைவிடுத் தருள்குகன் வேயாற்
பண்ணி சைக்குழ லாற்பசுப் புரந்தகோ பால
னண்ணு தற்கிட னானதா லரிமழ நகரம். (௩)

வேறு.

பூவினன் முகத்தோன் முன்னம் பொன்னகர் தனையோர் தட்டு
மேவுசீ ரிதையோர் தட்டும் விளங்கவைத் துயர்த்த காலை
நாவலோர் புகழிவ் வூர்தா நகரமென் றிருக்க வப்பே
ரோவறக் கொண்ட தேனை யூர்ப்பெயர் போன்ற தன்றே. (௪)

பொருளமை சாம கீத புராரியை யெண்ணுர் நெஞ்சி
னிருள்படப் பொதுளி யன்று ரிறுமாப்பு மிகர்ப்ப வோங்கித்
தெருளுறு மன்பர் மாட்டுச் சிவபிரா னினிது செய்யு
மருளெனக் கனிந்து சூழு மளப்பிலா ராம மல்கும். (௫)

## புடைநகர்

வேழ மேகொனீ யெனப்பல கன்னலை மெல்லுந்
தாழு நாகத்தை முட்டியே பொடிபடச் சாடுஞ்
சூழு மத்தியை யொடித்திடுந் தமதுருத் தோன்று
மீழ லேக்கொடும் பார்வையி னடுங்கரி நிரைகள். (௬)

எட்டு மாதிரத் தையும்வென் றுநிலவுறு வெம்மைக்
கட்டு மோர்தறி நீகொலா மெனவனைக் கனன்று
கிட்டு மன்னதா ளானமென் றுரைத்தலிற் கிளர்ந்து
முட்டு வெஞ்சின மொழிந்துறு மவண்பல முனிகள். (எ)

மருத்தை நீயொரு கால்விசை யுளாயெமை மானப்
பொருத்த மாமுழு வேகமுற் றிலையெனப் புகல்வான்
பெருத்த வீரிரு கால்களும் விசையொடு பிறங்க
வருத்த முற்றில வருவன பற்பல வாசி. (அ)

பிள்ளை கொக்குமா சேவலென் றுரைபெயர் கெழுமித்
தெள்ளு நாவல ருரைத்தலா லவர்மொழி தேற்றங்
கொள்ள வுன்னியே பறப்பன வெனவிசை குலவுந்
துள்ளி விண்மிசைப் போதரும் பற்பல துரகம். (கூ)

எமது ருக்கொள விருக்குமான் மனைவிமெ யின்ன
லமைய யாமிதி யேமென நினைவுகொண் டாங்குத்
தமைநி கர்த்தபல் வாம்பரி புவியிற்கா றட்டா
திமைய டிக்குமுன் வருவயல் யோசனை யெல்லை. (ய)

ஏற்ற மார்தவு ரிதகமுன் புலிதபீ ருகத்
தோற்று மைங்கதிப் பரிகட்குக் கலினங்க டுறுத்தல்
சாற்று மேம்பரி களைப்பொரு தாவகை தண்ணித்தற்
காற்று மோர்தடை யல்லது வேறிலை யம்மா. (யக)

கடக ரிக்குலம் பொழிதரு கருமத சலமும்
படப டத்தெழு வாம்பரி விலாழியும் பரவித்
தடம ணித்தெரு வழுக்கெடுத் திடப்புரிந் தனவே
லடைய வவ்விரு மாக்களின் வளமெவ ரறைவார். (யஉ)

செய்ய மாவலி பாலிரந் தவனுயிர் செகுத்தோ
னெய்யெ னைமுன முண்டுமிழ்ந் தெச்சில்செ யுன்னை
வைய மென்றெமைப் போற்சொல வையமென் றெதிர்த்தே
யையடு வாழியிற் றகர்ப்பன பலரத மங்கண். (யங)

கூறு மிக்குயர்ந் தோரொரு வரைவென் றூற் கூவின்
வேறி யானையும் வென்றன மெனவுள மேவி
யாறு சூடினோ னிரதமெய் கிழிபட வாழி
வீறு கொண்டருள் பற்பல கூவிரம் விளங்கும். (கச)

ஏற்ற வந்தவர் கிழத்திய ரழுமொலி யெழுப்பத்
தூற்ற தங்கர விற்சிறு நாணொலி தொகுப்பார்
முற்று போரையே பேரணி யெனக்கொளு மொய்ம்பார்
மற்று மேவணி களையணு வாயினு மதியார். (௰௫)

கார்வ யங்கிய முழக்கென வின்னவர் கலிப்பாற்
போர்வ யங்குறு நாளெலா நம்பெரும் பொருப்பி
னோர்வ யங்குதோள் வலிமரு வலரிலா நீராற்
சீர்வ யங்கில தேயெனக் கவன்றிடுஞ் செயலார். (௰௬)

வேறு.

எங்கும்பொய் யெனுமு டம்பை யெவருமெய் யென விசைத்தன்
மங்கல வழக்கா மென்று மனத்திடை நினைத்து வாழுந்
துங்கமார் வயவர் தன்மை சொல்லுதற் கெளிதோ மேன்மை
பொங்கிடை நகரின் பண்பும் புகலுதுஞ் சிறிது மன்னோ. (௰௭)

## இடைநகர்.

வேறு.

நீணி திப்பெருஞ் செல்வமு மியாக்கையு நிலைமை
பூணு றாதுபோம் வருமிது போலெனப் புலத்திற்
காணு மாறுபல் கன்னிய ரூசலிற் கவினுஞ்
சேணு லாமலர்ப் பொதும்பர்கள் வயின்வயிற் றிகழும். (௰௮)

கையின் மேவுபொற் பந்தயம் பந்தயங் கழற்றித்
தொய்யின் மாமுலைக் கிணையெனக் கவிஞர்கள் சொலுஞ்சொ
லையமேவுவிண் ணிடையிருந் தாற்சரி யாமென்
றுய்யெ னக்கக னத்திடை யுந்தின ருவப்பார். (௰௯)

நந்து நந்துநற் களத்தியர் நகிலநேர் நகில
வந்த தாமென வடிப்பர்கண் மீளவு மருவப்
பந்து வந்திடிற் புரத்தறம் மியற்கையாம் பண்பாற்
பந்து வந்தவென் றுளங்களித் தேற்பர்பா வையரே. (உ0)

வேறு.

எந்தே கம்போன் றுடலெனும்பே ரேய்ந்தா யெனினு மாலையிட்டு
வந்தார் கமலக் கரமன்றி மருவா வெமது தனப்பேரை
யந்தோ புனைந்தாய் பலர்கரமு மடிப்பாய் சிச்சி யெனக்கனன்று
நொந்தா ரிடித்தா லெனக்கனக நொறுங்க விடிப்பார் பலமாதர். (உக)

இருமை யுடற்கோ ராவியுள தென்னே புறுமை யெனமனத்தா
லொருமை யுடைய வாடவரு முழையன் றொரு முலவியுறுங்
கருமை படியும் பூங்காவுங் கமலத் தடமுஞ் செழித்தோங்கும்
பெருமை யிடைமா நகரிதுவாம் பேசப் புகுவா முண்ணகரே. (உஉ)

உண்ணகர்.

வேறு.

வரைவிலான் சிவலிங்க வடிவாகி யரிமழத்தில்
வாழல் காணாத்
திரைசெய்நீர்த் திரிபதகை யந்நகர்சூழ் கிடந்துசெவி
சேரா நண்பற்
குறைசெய்வா மிதனையென நாகருல குறுவதுபோ
லொலியா லோங்குங்
கரைசெயாக் கடலனைய கிடங்கு நிலை யெவராலுங்
காணொண் ணாதால். (உங)

எமதுகுலத் தொன்றனுயி ரிறுத்தமா லவனுருவ
மெடுத்த மீனங்
கமடமினைத் தொடுங்கும்வகை கடுகடுப்பேம் வலனுயிற்
காக்க வென்னுந்
தமதுபகைக் கரியினத்தைச் சாடுமிய மனுக்குமச்சந்
தனையு றுத்து
மமையும்வலி மிகப்படைத்த விடங்கரினங் கிடங்கினங்
களவின்ற னன்றே. (உச)

பொன்னிதழித் தொடைப்பெருமான் றனைவிடுத்து வீற்றிருக்கும்
புனிதத் தான
மென்னவிர சிதப்பொருப்பு மெய்திவளோங் கினிதிருப்ப
தேய்க்கும் வானந்
கான்வமெழு வர்ம்புரவி நடைதட்ப விண்ணளவுந்
தோய்ந்தி யாரும்
பன்னரிய வலிபடைத்துப் பலபொறிசேர் நொச்சியெழில்
பகரற் பாற்றே. (உ௫)

## கணிகையர் வீதி.

தரைமிசைப் பாதந் தீண்டின்விண் ணவரித்
தையலர் வாய்தலிற் கொணர்ந்தே
யுரியபொற் புவிப்பொன் னனைத்துமீ குவரென்
றுன்னிய நான்மறைக் கிழவன்
பெரியவா னவர்காற் றரைமிசைத் தோயாப்
பெற்றிசெய் தானென்பர் பெரிய
ரரகர வினைய கணிகையர் செவ்வி
யளவறிந் தியாவரே யறைவார். (உ௬)

பரத்தைய ரென்னும் பரமனு ரொருகாற் பண்புளோர்க்
களிப்பரோர் சுவர்க்க
மரத்தைநேர் விழியிப் பரத்தையர் தம்பா லடுப்பவர்
பண்பிலா ரெனினுங்
கரத்திடைக் கொள்ள நிச்சலு முள்ளங் களித்திரு
சுவர்க்கமீந் திடுவார்
வரத்தினு லுயர்ந்தோ ரிருவரி லெவரோ வழுத்துவீ
ரறிவினல் வல்லீர், (உ௭)

வள்ளுவர் பொருளி லாருக்கிவ் வுலக
மருவிய சுகமிலை யென்னத்
தெள்ளி நன்குரைத்தா ரச்சுக மிதெனச்
செப்பிலா ரறிந்தனம் வறிய
ரள்ளுதற் கமைந்த பேரெழி லுடையா
ராயினும் விடுத்துப் பொன்னளிப்போ
ரெள்ளுபல் லிழிஞ ரேனுமுற் றிடுவா
ரிக்கணி கையர்சுக மொன்றே. (உ௮)

வேறு.

துன்று மாநிதி யோர்வந்து நிதிதந்து தோர்டு
மன்று மேவெறுக் கையைக்கா [illegible] ரவர்பெயரன்
குன்று காலையு மகததிடையே வெறுமையே கொள்வா
ரென்று மொன்றுபோ [illegible] லா [illegible]ல்லவரே. (௯)

## கவீட வீதி.

தரைப்பொருளும் வரைப்பொருளுஞ் [illegible]
நிரைப்படவைத் தெல்லவரு நினைததவகை பெறததருமக
குரைப்பகலாக் கடலாடைக குவலயமான் பண்டாரம்
வரைப்பிலவெவ் வேறிருக்கும வகைகாட்டு நியமமெலாம். (௧௰)

மருக்காலு மலர்பகரு மடவரலே யடுத்தணங்கே
யரக்காம்ப லிதழ்க்கோவை யாரவிலே யுரையென்ன
வுரைப்பானைப் பணசெருககா றுரைததியோ வெனச்சினவத்
திருப்பாவா யுனக்குளதக தெனககிலெனச் சொ[illegible]ல். (௧௧)

அருமைநவ மணியினமு மளப்பிலா நிதிததியளுந
தருமநெறி யாலீட்டித் தகப்பெருககு மிருநகர
மொருமணியு மிருநிதியு முறுமும்ப ரூரதனைப
பெரிதுநகை செய்தென்னப பிறங்குமணி வடநாளும். (௧௨)

பரவைகடைந் துடல்கரிநது படாதபல பாடுற்றுத்
திருநெடுமால் பொன்னுடை சேர்ந்துபே ருறலென்னே
பெருமையதின் மிகசசிறநத பேராடை வேட்பவர்க்குத்
தருவதெதிர் நோககியுறு தன்மையதிவ் வாவணமே. (௧௩)

## சூத்திரர் வீதி.

விளங்கியபல் வகைப்பொருளும் வேண்டியடைந தவரெவரு
முளங்களிப்பப் பெற்றிடுவா னுற்றவா வணம்புகன்றும்
வளங்கெழுபன் னிலநலனும வளர்வித்து மனைநிலையிற்
றுளங்கலிலாச் சூத்திரர்தந் தொன்மைநலஞ் சொல்கிற்பாம் (௧௪)

முன்னருறு மூவகையோர் மொழிந்தபணி விடைபுரிந்து
மன்னுபல தொழிலாற்றி மருதநில வளம்பெருக்கிக்
கன்னல்கமு கரம்பையிலாங் கலிவளர்த்துக் கலிதவிர்த்துத்
துன்னியநட் புரிமைகொடு துலங்கிநிறை குவரெங்கும். (கூரு)

நூலாய்ந்து பாவாக்கி நுண்ணியபல் கலையியற்றி
மேலான புலவரென விளங்குகா ருகவினைஞர்
பாலாதி தருந்தெய்வப் பசுப்புரப்பார் பணிசமைப்பார்
தோலாரு முழவதிர்ப்பார் தொழில்வகையெம் மளவிற்றே. (கூசு)

எந்நாளுந் தொழில்புரிவா ரிசைக்குயிலு வம்பயில்வார்
கொன்றாரும் புயவலியார் குலவுமன நலமுடையார்
பின்றென குலத்துதித்தார் பிறங்குதெரு வளம்புகன்றுந்
துன்றரில் லாவசியர் தொன்மறுகி னணிபகர்வாம். (கூஎ)

## வைசியர் வீதி.

ஒருவணியி னிடமுரைத்த வொருமொழியை மனத்துன்னி
யிருபதினோ டைம்பதின்ம ரின்னுயிர்நீத் தறங்காத்த
பெருமையவே ளாண்குடியிற் பிறபபுடையார் வாசகத்தி
னொருமையுடை யாரெனயா முரைப்பதுமோர் புகழாமே. (கூஅ)

வாசவனு தியவானோர் வாசகநம் பாமாறன்
றேசுமலி யிவர்குலத்தோர் செப்புமொழி நம்பினலோ
லீசனடிக் கன்புநிறை யிவர்குலமோ தேவர்களோ
பேசுமிடத் தினிலுயர்வு பெற்றவர்கள் பெருமதியீர். (கூகூ)

கொடையினாற் கார்காத்த குலப்பண்புங் குளிர்ந்துநல
மிடையறு வாசகத்தா லினியகங்கை குலப்பண்பு
நடையினு னூலறிவு நாடோறும் வெளியிடுவார்
விடையினர் பதந்துயிலும் வேலையிலு மறவாதார். (சய)

விடையா[illegible] ரன்பர்பணி விடையாளர் விருநதருத்தச்
சடையார்க ளகம்புறமா சடையார்க டனிசெல்வ
முடையார்கள் பொன்னிழைசே ருடையார்க ளுயர்கதவ
மடையார்க ளடையார்க ளடையார்க ளாதலினல். (சக)

மறைபுகலு மகமாதி வகுத்ததொழி லெவற்றுள்ளு
நிறைபுகழற் றொப்பிகந்த நீர்த்துழவஃ தியற்றுவரே
தறையிடைவாழ் வுடையரெனச் சாற்றினர்செந் நாப்போதார்
குறைபயிலா விவர்வாழ்வு கொடுப்பர்புவி யோரெவர்க்கும். (௪௨)

மன்னவர்க்குத் தூதேகல் வயமுறவெஞ் சமராற்ற
னன்னிலைமை யமைச்சுரிமை நண்ணன்மகட் கொடையளித்தன்
மின்னியவே ளாண்மைசெயல் விருந்தருந்தி மிகையருந்த
லென்னுமிவை முதற்பலசி றெய்திவளர் மேன்மையினோர். (௪௩)

எல்லவரு மெய்பொருளு மெவர்க்குமெடுத் தெடுத்துதவி
வல்லகணக் கினிவிம்மி வரையும்மழை வாராகிக்
கல்லுமுரு கிடப்பேசிக் கடலுலகை வசப்படுத்திப்
புல்லுதலால் வசியரெனப் புகல்பவரே வைசியரென்போர். (௪௪)

தரைமிசையும் வரைமிசையும் புனைமிசையுஞ் சார்ந்துபல
பொருணிறைந்த பேழையெலாம் பொன்னிறைத்துப் புகழ்நிறைத்து
மருவுமிவர் பெருவாழ்வின் வளப்பனைத்துந் தெரிந்தன்றோ
திரைகடலோ டியுநிதியந் தேடுகவென் றார்முதியோர். (௪௫)

பூவுலகத் தெவர்தனத்தாற் பொலிந்தவரா யினுமவர்பால்
மேவுதன மெலாந்தம்பால் மேவுபெருந் தவமுண்டா
ராவதிது வறிந்தன்றோ வன்னவர்க்குப் பொருந்தமுறத்
தாவில்பெரி யோருரைத்தார் தனவைசிய ரெனுநாமம். (௪௬)

தனத்தான்மட் டுஞ்சிறந்த தன்மையரோ தருமநெறி
மனத்தாலுஞ் சிறப்புடையார் மல்குமுயர் குடிவாழ்க்கை
யினத்தாலுஞ் சிறப்புடையா ரிடங்கொடா து மடைகின்ற
கனத்தாலுஞ் சிறப்புடையார் கருத்தாலுஞ் சிறப்புடையார். (௪௭)

எத்தனைதண் ணீர்ப்பந்த ரெத்தனையோ பசுமடங்க
ளெத்தனைகல் விச்சாலை யெத்தனையோ சத்திரங்க
ளெத்தனையோ வாவிதரு வெத்தனையோ விவர்தரும
மெத்தனையோ வத்தனையு மித்தனையென் றெவர் புகல்வார். (௪௮)

